




# இன்பம் பொங்கும் வெண்ணிலா வீசுதே
















Pax Ravichandra

pax.ravichandra@gmail.com

08-03-2024

# இன்பம் பொங்கும் வெண்ணிலா வீசுதே

---

## தகையணங்குறுதல்–காதலியை நினைத்து உருகுதல்





கண் பார்த்து நெஞ்செழுத மலர் வனத்தில்
கண்ட கன்னியோ அழகின் ஓவியம், காதலாகி
மனம் மயங்கிட மதன காவியம்

கம்பனும், கவி காளிதாஸனும் சொல்லாத அழகு,
கண்களால் என்னை வருத்த, கனவிலும், நினைவிலும்
காதலாகி என்னை வாட்டும் தேன்நிலவு?

கணை தைத்தும் வருந்தாத என் நெஞ்சு
கன்னி வேல்விழிப் பார்வை பட்டு காதலாகி நொந்ததே,
நெஞ்சுற்ற காதற் காயம் கனவிலும் வருந்துதே

விழிகளா இவை? என்னை நெஞ்சைக் கவ்வத் துடிக்கும்
கயல்களோ? பார்வையால் என்னைக் கவரும்
காந்தப் புலமா, காதல் புலமா? நெஞ்சே நீ சொல்



பூ விழிப் பார்வையில் மலர்த்தேன் இனிக்க
புன்னகையில் தேன்மணம் கமழ-கண்டு
என் மனம் காதல் ரீங்காரம் பாடுவதென்ன?



விழிகளில் வேலை வைத்து, புருவங்களில்
வில்லை வைத்து, முறுவலில் முத்தை வைத்து
காதலாகி மனம் மயங்க, என்னை மயக்கிய தேவதை

கொடியுடலில் அழகின் கோலம், கோல மயிலின் சாயல்
கொவ்வை இதழ்களில் தேன்கனிச் சுவைகள்,
விழி பொழியும் காதல் பூமழை-கணை பட்ட
மானாய் விழுந்திட்ட என் மனதிலோ தேன் மழை

மதி நுதலும், மலர் சூடிய கார் குழலும்
என்னை மயக்க, மனதிலோ கவிதை-நெஞ்சிலோ
என்னைக் கவிஞனாக்கிய மங்கை

உண்டிடப் போதை தருவதோ மது, கண்டிட, நெஞ்சத்தில்
காதல் போதை தந்த கன்னியோ தேவமாது
மது போதையோ சில மணி நேரம், மங்கை தந்த
காதல் போதையோ வாழ்நாள் தோறும்

# குறிப்பறிதல்

- - - - - - - - - - - - - - - - - - - - - -



ஒரு விழியாள் நோய் தந்து-மறு விழியாள்
நோய் தணிக்கும் காதல் பெண்ணாள் இவள்

கண்ணால் என் நெஞ்சைக் கொத்தி-காதல் சொன்ன
காதல் மரங்கொத்தி அழகிய பெண்ணாள்



கண் பார்க்க மண் பார்த்தாள்,
வான் பார்க்க என்னைப் பார்த்த திருமகள்
நெஞ்சில் காதலை வார்த்த காதல் மகள்

கண் படக் கனிந்த கனி-காதல்
சொல்ல நாணி இதயத்துள் விழுந்த கன்னி

பொன்னணி எதற்கு.? பூவனமாய்க் கன்னி
ஐம்பூ விளையும் அமிர்த நிலமாய்ப் பூங்கொடி

மொழியில் தேன் வைத்து, விழியாய் பூ வைத்த
மலர்விழியாள் பெயரோ தேன் மொழி



கண்களால் என் நெஞ்சைத் திருடி
காதல் கனிந்து நாணிய கன்னி-தேன் கனி



நூலிடை மேகலை மோகனம் பாட, பஞ்சுப்
பாதக் கொலுசு கட்டியம் கூற, வளையல்கள் குலுக்கி,
கண்களால் காதல் சொன்ன பஞ்சவர்ணக் கிளி

காணாததுபோல் கடந்து சென்று-கணை பட்ட
மானாய் நான் வருந்த, கடைக் கண்ணால்
காதல் அமுது தந்த தேவதை

கட்டியமாய் கொலுசொலிக்கும், வளை சிணுங்கும்
காற்றில் கலந்து வரும் பூவாசம் நெஞ்சை நிறைக்க,
கன்னியின் வருகை என்னைக் காதல் கடலில் மூழ்கடிக்கும்

நூலிடையில் நூபுரமாய் கட்டிக் கொள்-பூமேனியில்
கலிங்கமாய் என்னைப் போர்த்திக் கொள் என்
மனம் கவி பாடக் காட்சி தரும் காதல் மங்கை
காமனை வெல்லத் துணையான அழகு நங்கை

# புணர்ச்சி மகிழ்தல்-கூடுதலின் இன்பம்

- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -





ஐம்புலன் மயங்க கன்னியோ காதல் கனி
ஆறாம் அறிவு கவி பாட நங்கையோ, குமரனுக்கும்
விநாயகனுக்கும் கிட்டாத கன்னி

மெய்யுற்ற நோய்க்கு மருந்துண்டு-காதல்
நெஞ்சுற்ற நோய்க்கு கன்னியே அருமருந்து

மடிமீது தலை வைத்து விடியும் வரை தூங்கிட
விடியாதே பொழுதே, பிரியாத கருவான் நிலவே
காதலர் நெஞ்சம் பாடும் கீதம்

தொட்டால் கை மணக்கும்-அணைத்தால்
உயிர் சிலிர்த்து மெய் மணக்கும்
வாசச் சந்தனமாய் பூவை

பூவையைப் பார்த்து பூக்களைப் படைத்தானா?
இல்லை பூக்களைப் பார்த்து பூவையைப்
படைத்தானா பிரம்மன் ?



கட்டித் தழுவிட மெய் உற்ற நோய் தணியும்
கனிந்த இதழ் தேன் பருகிட காதல் நோய்
வளரும், கன்னியோ காதலின்அதிசய மருந்து

உண்டு சுவைத்தும் திகட்டாத அமுது
கண்டு சுவைக்க கவி பாடும் மனது



கார்குழலில் மல்லிகை, கருவிழியில் குவளை,
தேன் மொழியில் கிள்ளை, தெவிட்டாத
காதல் இன்பமாய் நங்கை

அணைத்திட ஊடினாள், ஊடறுத்தச் செல்லும்
காற்றைத் தடுத்து கட்டித் தழுவிடக் கூடினாள்

மெய் தீண்டினால் இன்பம், தீண்டாமையோ
இவளால் நான் படும் பெருந் துன்பம்

கன்னங்களோ கிண்ணம் பழம், கனிந்த
செவ்வாயிதழ்களில் திகட்டாத மதுரசம்
சுவைத்துப் பருகிட நெஞ்சில் சப்தசுரம்

# நலம் புனைந்துரைத்தல்-தலைவியின் அழகைப் புகழ்தல்

\- - - - - - - - - - - - - - - - - - - - - - - - -

வண்ணம், வாசம் கொண்ட மல்லிகையே
உன்தன் வாழ்வோ ஒருபொழுது
என் இதயத்தில் காதலாகி இனிப்பவள்
வாழ்வோ, எந்தன் வாழ் நாள் முழுதும்



இதழ் விரித்துச் சிரித்தாள் முத்துப் புன்னகை
என்றேன்-இதயத் தாள் திறந்து அழைத்தாள்,
உந்தன் காதலன் நான் என்றேன்



மதிமுகம் பார்த்து வான் நிலவு மயங்கியது
என்னே அழகு இந்த மண் நிலா என்று,
பார்த்த பங்கயமும் ஏங்கியது
என்னே மலர்முகம் ஏந்திழைக்கென்று

விழி கண்டு குவளை வியந்து
மங்கை நடை கண்டு அன்னமும் நாணியது
நங்கை குரல் கேட்டு கானக்குயிலும் மயங்கியது

இடை கண்டு கொடிகள் களிப்பால் அசைந்திட
கன்னி சாயல் கண்டு வியந்து-கார்குழல்
மேகம் என்றே களி நடனம் புரிந்த தோகை



புல்லும் நோகாமல், சிறு பூவும் கசங்காமல்
நடந்த பங்கயப் பாதங்கண்டு அனிச்சமும்,
அன்னத்தின் தூவியும் அகமகிழ்ந்தனவே



வேலோ விழிகள், வில்லோ புருவம்
கொவ்வைச் செவ்வாய், கொடியிடை மேனி,
காளையர் மயங்கிடக் காமனின் வேதம்
கவிஞனாகி நான் படிக்க காதல் கீதம்

பூவிலும் மென்மை, அணைப்பில் தென்றலின்
தன்மை, வண்ணப் பொன் மேனியிலோ
வாசச் சுகந்தம், இதயத்திலோ காதலின் பந்தம்

கண்டு நாணும் விழிகளில் சோடிக்குயிலின்
கீதம், காணாமல் கரையும் போது
ஒற்றறைக் குயிலின் கானம்

# காதந் சிறப்புரைத்தல்

-----------------------------------

கனி மொழிகளில் கவிதை, கயல் விழிகளில்
தேனிலும் தெவிட்டாத காதலின் சுவை
கன்னியோ அழகின் பேரவை



உள்ளோடும் குருதியும்-என்னுள்
உலாவும் சுவாசக் காற்றும் நீதானடி



பேச்சிலே மொழியாகி, எழுத்திலே கவிதையாகி
என்னுள் உறைகின்ற காதல் மகள் இவளே

நினைவிலும் நீதான், கனவிலும் நீதான்
நெஞ்சை நிறைத்த காதலும் நீதான்

பொன்னணி எதற்கு, பூவணி எதற்கு?, பொன்னாய்.
பூவாய் என் காதலர், நெஞ்சக் கமலத்தில் இருக்கையில்

இமையே மூடாதே, என்னவர்
அழகு ரூபத்தை மறையாதே

உயிரில் கலந்த உறவே-மலரோடு கலந்த மணமாய்
தேனில் நிறைந்த தெவிட்டாத சுவையாய் நம் காதல்



வானில் ஓர் நிலவு-வைதேகி நீயோ
ஸ்ரீராமன் என் காதல் தேன்நிலவு



காதலே உன்னை நான் நினைப்பதில்லை
ஏனெனில் உன்னை நான் மறப்பதில்லை

மீட்டினால் வீணையில் நாதம் -மீட்டாமலே
உன்னைக் காண, என் நெஞ்சிலே காதலின் கீதம்

இரு விழிகள் காண வானில் ஓர் நிலவு
இரு நெஞ்சங்கள் காண
இருவர் உள்ளத்திலும் காதல் தேன்நிலா

கண்ணிலோ, கண்ணைக் கவரும் காந்தப் புலம்-நெஞ்சிலோ
இருவர் நெஞ்சையும் ஒன்றாய் ஈர்க்கும் காதல் புலம்-என்னை
ஈர்க்கும் புவியீர்ப்பு விசை உன்தன் காதலடி, காந்த ஊசியாய்
இதயம் சுட்டுவதும் காதல் புலம் கன்னி உன்னைத்தானடி

# நாணுத் துறவுரைத்தல்-நாணத்தை மீறுதலைக் கூறுதல்

\- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -

எண்ணி ஏங்கினேன், உருகிக் காதலை கவிதையில்
வடித்து வாடினேன், கிட்டாத காதல் எட்டாத நிலவாக
கண்மணி உனக்காய் என் காதல் தவம்.- என்தன்
தேவதையே தருவாய் காதல் வரம்





காதல் வெள்ளமோ கழுத்தளவு-நீந்தத் தெரியாமல்
மூழ்கின்றேன், சோக வெள்ளம் அடித்துச் செல்ல,
நேசமே உன்னை நினைத்துக் கதறுகின்றேன்

உன்னை நினைக்கையில் இனிக்கும் இதயம், நிலவிலும்,
மலரிலும் உன் வாசம், நீ மறந்தபோது, நெருப்பிலும்,
நீள் கடலிலும் தவிக்கும் என் சுவாசம்

மலரைக் தந்தேன் ஏனடி முள்ளைத் தந்தாய்?
என்னைத் தந்தேன் ஏனடி உன்னைத் தராமல்
என்னைத் தவிக்க விட்டாய்?

என் நெஞ்சில் உன்னைத் தவிர யாருமில்லை
உன் நெஞ்சில் ஓர் மூலையில் ஏனும் இடம் கொடு
உன்தன் உபாசகன் காதலை யாசிக்கிறான்

மதுமலரே உன்னைச் சுற்றி ரீங்காரமிட்டேன்
இதயத் தாள் நீ திறக்கவில்லை- கானக் குயிலாய்
பாடி அழைத்தேன் சோடிக்குயிலாய் பதில் தரவில்லை
கலாபமயிலாய் ஆடி அழைத்தேன் நீ ஆட வில்லை
வலிக்கும் இதயம், துடிக்க மறக்குதடி





கண் பார்த்து, காதலை நெஞ்செழுத கவிதைத்
தூதுவிட்டேன், காதல் மழையின்றிக் கருகுதடி
என் நெஞ்சம், காதல் மழையே கடைக்கண் பாரடி

நீ பார்க்குமிடத்தில் காதல் தவத்தில் என் இருப்பு-
உன் இதயத்தின் குவியத்துாரத்தில் என் நிலைப்பு
கண்டும் காணாதவளாய் நீ, நெஞ்சம் நோகுதடி

ஷாஜகான் நானடி, என்தன் மும்தாஜ் நீயடி
நான் அறிந்ததை நீ அறியாத சோகம்
என் நெஞ்சிலே தேவாதாஸின் காதல் தாகம்
எல்லாம் மாயைதானா என்ற மாறாத கீதம்

## அலர் அறிவுறுத்தல்-ஊரார் கேலி செய்தல்

---



உற்றார் கடிந்தும், ஊரார் பழித்தும்-நெஞ்சை எரிக்கும்
காதற் காமம், கண்ணாளனை எண்ணிடப் பொங்கும்
பூம்புனலாய் இதயம், என்தன் தெய்வம் நீதான்
உன்தன் காதலி என்றும் நானதான்

ஊரார் உன்னைப் பழித்திட, என்
கண்கள் செய்த பாவமா உன்னைக் கண்டது?
இதயம் செய்த குற்றமா காதல் கொண்டது



ஊரார் பழித்திட காயமான என் மனம்
காதலாகிக் கனிந்ததென்ன?
எண்ணிட நாணம் என்னை மூடுவதென்ன?

கண்டது ஒரு நாள், காதல் கொண்டது
ஒரு கணம், ஊராருக்கு எம் காதல்
அசைபோடக் கதையானது, நமக்கோ
காதல் திகட்டாத இன்பமானது

அன்னை கடிந்தும் வாடவில்லை,
அயலார் பழித்தும் மனம் நோகவில்லை
வசையோ எருவும், நீருமாக, வாடா மலராய்
நம் காதல் வளரும் மாயம்தான் என்னே!

அடக்க முயன்றேன் முடியவில்லை-உன்னை
மறக்க முயன்றேன் முடியவில்லை
ஊரார் கதையோ வளரும் காதல் நெருப்பிற்கு
நெய் வார்த்த கதையானது, நெஞ்சம் விம்முது





ஊரார் நாண உன்னை மறவேன் பிரியேன் என்றவரே
என்னை மறந்தார், இன்று, ஊரார் பழிக்க
ஒற்றைக் குயிலாய் என் மனம் கரைவதென்ன?

முதல் வரியாய் நீயிருக்க, அடிவரியாய் நானிருக்க,
வள்ளுவன், வாசுகியாய் நம் காதல்,
போற்றுவார் போற்றிடத், தூற்றுவார் தூற்றிட, கண்
பார்த்து, நெஞ்செழுதிய இன்பத்துப் பாலாய் நம் கதை

நாமிருவர் அறிந்த காதலை, உலகறிய, ஊர் பரப்ப,
வாழும் நம் காதல், அழியாதது

# பிரிவாற்றாமை

\- - - - - - - - - - - - - - - - - - - - - - -

பிரியேன் என்றவரே என்னைப் பிரிந்தார்
உன்னை மறவேன் என்றவரே என்னை மறந்தார்
வேரறுந்த கொடியாய் வாடும் என் மெய்
சிறகொடிந்த பறவையாய் துடிக்கும் எனனுயிர்



உறவும், பிரிவும் வரும் வாழ்வில்
உற்ற காதலர் பிரிவால், வற்றாத கங்கை
வற்றியதுபோல் வருந்தும் என்தன் நெஞ்சு



கண்ணிற்கு மையில்லை, கார்குழலுக்கு
மலர் இல்லை, கைகளுக்கு வளையல் இல்லை
கால்களுக்கு கொலுசில்லை, காதலர் பிரிவை
எண்ணி வாடும் பூவை நெஞ்சிலோ வேதனை

பாலும் கசந்தடி, பஞ்சணையும் நோகுதடி-சூடும்
மலரும் முள்ளாய் வருத்துதடி, வான் நிலவும்
நெருப்பாய்த் தகிக்குதடி என்னைப் பிரிந்தவர்
துயரால் என்தன் பிரிய தோழி

உன்னை எண்ணி, ஊன் மறந்தேன், உறக்கம் துறந்தேன்,
கண்ணாளானே என்னை மறந்தனையோ? முத்த மழையின்றி
வாடி மெலியுதடா உன்தன் வண்ணப் பூங்கொடி



எண்ணித் துடிக்கும் என் சின்ன இதயத்தில்
நீ தந்த பிரிவோ இமயப் பாரமடா



கையளவு மனசுக்குள் கடலளவு காதல் தந்தாய்
பொங்கிப் பூரித்த இதயம் இன்று உன் பிரிவால்
வற்றிய கங்கையாய் வருந்துவதென்ன?. சோகம்
காங்கையாய் என்னை எரிப்பதுமென்ன?

உறவிருந்தும், ஊரார் இருந்தும் நீயில்லாத உலகு எரி நரகாய்
வாட்டுவதென்ன? ஈர விழிகளில் கண்ணீர் மழைக்காலம்
எந்தன் இதயத்திலோ சோகப் பூகம்பம்

பொன்னும், மணியும், மாளிகையுமிருந்தும்- நீயின்றி
சோகவனத்தில் என் சிறை வாசம், -எந்தன்
மனதிலே உன்தன் மாறாத நேசம்- ஸ்ரீராமனே
சீதை என்னைச் சிறை மீட்க விரைந்து வா என் உபவாசம்

# இதய வீணை

\- - - - - - - - - - - - - - - - - - - - - - - - -





மெய்யால் பிரிந்து, உயிரால் இணைந்து, நினைவால்
கலந்து, காதலால் வருந்தி, கண்ணீர் சிந்தும் நெஞ்சம்,
எட்டாத் தொலைவில் நீயிருந்தும், இதயவானில்
வட்ட நிலவாய் உலாவரும் உன் முகம்

திகட்டாத காதலால் பிரிவிலும் சிறிது நிம்மதி,
பொன்னோடு வருவேன், என் அரும்பொருளே
கண்ணே, நீயோ என்தன் காதல் பெரு நிதி,
நம் வாழ்வோ காதலின் இன்பச் சந்நிதி

உன் நினைவே என் நெஞ்சுக்கு ஆறுதல், உன் காதலோ
என் கற்பிற்கு காவல் -என் சித்தம், நினைப்புச், செய்கை
எல்லாம், நித்திலவல்லி, செல்வப் பூங்கோதாய்
உன் நினைவில் வாழுதடி, கலங்காதே காதல் கண்மணி

ஊர் பழித்து, உற்றார் கடிந்தாலும் என் நெஞ்சம்
ஒருபோதும் உன்னை மறவாது, பூவும், பொட்டும்
பொன்னகையும் துறந்தாலும், உன் நினைவால்-என்
நெஞ்சிலே மாறாத புன்னகை, நீயே என் முத்து நகை

கட்டுடல் குலைய கண்ணீர்த் தவமிருக்கும் நெஞ்சம்
என்க்காய் நீ படும் பாட்டை எண்ணிக் கலங்கும்
வாழும் நம் காதலோ ஆல்போல் தழைத்து, அருகுபோல்
வேரூன்றி வாழும் கண்ணாளா கலங்காதே





உன் இதயத்தை தந்து விட்டு என் இதயத்தை
எடுத்துச் சென்றாய், உனக்குள் துடிப்பதோ
என் இதயம், எனக்குள் தவிப்பதோ உன்
இதயம், கலங்காதே கண்ணாளா

இதயங்கள் இடம் மாறிட பிறந்த காதல்
இன்பத்தை அள்ளித் தந்த ஊடல், கூடிக்
கொண்டாடிய காமன் திருவிழா, நெஞ்சம்
இனிக்க நினைவில் நிலைத்த இன்ப உலா

உன் கையில் நானோ வெற்றுப் புல்லாங் குழல்
உன் இதழ் பட்டு, உன்தன் உயிர்காற்று உலாவர
என்னில் காதலின் வேணுகானம்
கண்ணன். ராதையாய் நம் ஆனந்தக் கோலம்

என்னைத் தழுவி, உன்னைத் தந்து-என்னில்
நீ இசைத்த சப்த சுரங்கள், இன்றும்
என் நெஞ்சில் சுருதி குலையாமல் ஒலிக்குதடா
இசைஞானி உனக்காய் இதய வீணை தவிக்குதடா



உள்ளம் குளிர, உரோமம் சிலிர்த்துறைய, மதி நுதலில்
வியர்வை அரும்ப நீ தந்த காதல் விருந்தோம்பல்-
காஞ்சி இருக்க, கலிங்கம் கலைய மழையாய் நீ
மண்ணாய் நான் கலந்த இன்பம் நினைவிலும்
இனிக்குதடா, எண்ணிட நெஞ்சம் தவிக்குதடா




மையெழுதி விழிகள் பூத்திருக்க, மஞ்சள் பூசிக் குளித்த
மலர் மேனி சந்தனத்தில் மணந்திருக்க, மலர் சூடி
குழல் மகிழ்ந்திருக்க, நெஞ்சத்தில் நேசமும், கன்னத்தில்
நாணமும் கோலமிட உன் காதலியாள் காத்திருப்பாள்

வாசலில் கோலமிட்டு, மஞ்சத்தில் மலர் தூவி
மனதில் காதல் தீபமேற்றி, மது மலர் மலர்ந்திட
நீ வரும் வழி பார்த்து -ஶ்ரீராமா நாளும்
உனக்காய் காத்திருப்பாள் உன்தன் வைதேகி-மதுவுண்டு
மதுவண்டு மகிழத் மதுமலர் தேன் தருவாள்

நடந்த பாதங்கள் நோ தணிய கால் பிடிப்பேன்
வற்றிய வயிறு நிறைந்திட,அறுசுவை அன்னம்
படைப்பேன், உன்னைச் சூட மாலை சூடி, என்னைச்
சூட மஞ்சம் விரித்து காதற் பசி தணிப்பேன்



பருகிட முத்தச் செவ்வாயில் அமுதம்
தழுவிட பூங்கொடி மெய்யோ குமுதம்
அணைத்திட வளரும் காதல் தீ, அணைக்க
அணைக்க வளரும் அதிசயக் காமத் தீ



விடியும் வரை யாக்கும் காதல் வேள்வி
கண்ணாளா நான்தான் உன்தன் ஆகுதி
காதலே மந்திரமே, காம வேதமோ
நாம் படிக்கும் அன்பின் நூலகம்

மனமழிந்து காலம் மறைந்திட, புலரும்
பொழுதும் மறந்து நாம் பிரியாமல் இணைந்திட,
ஆறிடும் பிரிவின் ஆறாத ரணங்கள்,
நம் வாழ்வில் மாறாத காதல் வசந்தங்கள்

## படர் மெலிந்து இரங்கல்-நினைவுத் துயர்

-------------------------

வாட்டும் காமம்தான் காட்டுத் தீயாய் என்னை எரிக்க
வருத்தம்தான் எரிமலையாய் வெடித்து
என் நெஞ்சைக் காட்டிக் கொடுக்க-கொடிது
கொடிது, காதற் காமம் கொடிது



காம நோய் தீர்க்க கண்ணாளா நீயே அருமருந்து,
தோழியிருந்தும், தூது சொல்லி உன்னை அழைக்க
நாணமோ திரையான தொல்லை

காமப் பெருங்கடல் நீந்திக் கடக்க துடிக்கும்
கன்னி மனசு, மெலிந்து தவிக்கும் மெய்-கண்ணாளனே
காதல் தோணியாய் மாறி என்னைக் கரைசேர்



காதல், காதல் என இன்பத்தால் தவித்த
கன்னி மனசு, காதல் போயின் சாதல், சாதல் என
துன்பத்தால் துடிப்பதென்ன, மழை காணாப்
பயிராய், கன்னி மனம் வாடுவதென்ன?

இரவு தூங்கியும் உன்தன் காதல் நிலவு
தூங்கவில்லை, வருத்தும் காமம்,
பொழுது புலர்ந்தும் காமநோய்க்கு விடிவில்லை
கண்ணாளா நீ தந்த நோய்க்கு நீயே மருந்து



கூடி இன்புறக் காதற் காமம் தந்த
இன்பமோ தேன் கடல்-இன்று உன் பிரிவால்
வாடித் துன்புற வாழ்வோ எரிநரகு



நீயில்லாத உலகில் நிம்மதியில்லை
நீதான் என்தன் காதல் உலகு
கூடி வாழும்போது கானகமும் இன்பவனம்
நீ பிரிந்த போது வாழும் மாளிகையும் சோகவனம்

சேர்ந்த வாழ்ந்த காலங்களோ கணங்களாயின
பிரிந்து வாழும் கணங்களோ பல யுகங்களாயின
கண்ணளா காதற் காமம் என்னைப் பொசுக்குதடா

கண்டு மகிழ்ந்த பூவிழிகளில் கங்கை
உன் அழகை உண்டு மகிழ்ந்த நெஞ்சினிலோ காங்கை
ஏனடா என்னைப் பிரிந்தாய்?

## கண் விதுப்பழிதல்- கண் படுத்தும் பாடு

-------------------------

கண்டு மகிழ்ந்த கண்களே உன்னைக் காணாமல்
கண்ணீர் சிந்துவதென்ன? கண்ணீரே திரையாகி
உன்னைக் காணத் தடையானதுமென்ன?





கண் பார்த்து நெஞ்செழுதிய காவியம்
கண்ணீர் பெருகிட சோகமானது, காதலுக்கு
கண்களில்லை இன்று உண்மையானது
கன்னி நெஞ்சம் ஊமைக்குயிலானது

கண்கள் தந்த காதலின்பம் அன்று-கண்ணீர் பெருக
கண்கள் கரைந்து சோகம் பகிரும் துன்பமோ இன்று
கண்களே காதல் சொல்லும்
கண்களே கரைந்து பிரிவுத் துயர் சொல்லும்

காணத் தவித்துக் கண்ட கண்களும்,
பேசத் தவித்துப் பேசிய காதல் மொழிகளும்
இன்று கண்ணீரில் நீராடி, மௌனத்தில்
தவமிருக்க, கொடிது, கொடிது காதல் கொடிது

காண விழித்திருந்து தவித்த கண்கள், கண்டு
இமைத் திரைக்கு தாளிட்டு இன்புற்ற சேல்விழிகள்
இன்று சூனியத்தை வெறித்து, நீா சிந்திச்
சிவந்து, அன்பரைக் காணத் துடிப்பதென்ன?





நீர் சிந்தி துக்கப் பறை முழங்கும் என் விழிகள்
ஊரறிய என் காதலைச் சொல்லுவதென்ன?
செவ்விழிகள் செங்கொடி ஏந்தி-காதலோ
அன்பின் புரட்சி, எனப் பண் பாடுவதென்ன?

மொழி கடந்து விழிகள் எழுதிய கதை சோகமானது,
நெஞ்சில் நிலைத்த காதல் ஆறாத ரணமானது
கண்ணீரோ வாழ்வானது, மஞ்சமும், வாச மலர்களும்
காயும் நிலவும், கூவும் குயிலும் என்னைத் தீய்க்குது

உன்னைக் காணாமல் பூவிழிகளும் மாலை வந்ததென்று
வாடிப்போயின-உதயமே உன்னைக் காண -என்
கயல் விழிகளும் காதல் தவமிருந்து கண்ணீரில் நீந்திட
விரைந்து வா, காதல் விருந்தாய் வா-என் காதல் பசி தீர
உன்னைத் தந்து காதல் விருந்தோம்பு

# பசப்புறு பருவரல்– பசலைத் துயரம்

– – – – – – – – – – – – – – – – – – – – – – – –

நினைக்கத் தெரிந்த மனதிற்கு மறக்கத் தெரியவில்லை,
செவ்விழிகளிலோ கங்கை, பூ நெஞ்சிலோ காங்கை,
சோகச் சிறையிருந்து, ஶ்ரீராமன் வரவிற்காய்
காத்திருக்கும் வைதேகியாய் கன்னி என் நிலை





கண்டு இடம் மாறிய இதயங்கள், இன்று
உன்னைக் காணாமல் படும் இமயத் துயரங்கள்
நெஞ்சமெல்லாம் நீயாகி, நினைவெல்லாம்
உனதாகி புலம்பும் காதல் அஞ்சுகம்

காம நோயுற்று பொன்மேனி பசலை பூத்திருக்க
விரகதாபத்தால் நெஞ்சம் உன் அன்பிற்காய்
விடாய்த்திருக்க, உன்னைத் தேடி அலைபாயும்
நெஞ்சம், எரி நரகாய்த் தீய்க்கும் என்தன் மஞ்சம்

உனக்குள் துடிப்பதோ என் இதயம்-
என்னுள் தவிப்பதோ உன் இதயம்
இதயங்கள் இடம்மாறிட பிறந்த காதல்-இன்று
ஒற்றைக் குயிலின் கானத்திலோ சாதல்





அணுவணுவாய்க் கொல்லும் உன்தன் பிரிவு
உன் அன்போ என்தன் புத்துயிர்ப்பு,
நீயில்லாத உலகோ எரி நரகம்
நீ வாழுமிடமே என்தன் சொர்க்கம்

நீ எங்கே? என் நினைவுகள் அங்கே
நெஞ்சமெல்லாம் நீயாகி, நினைவெல்லாம்
உனதாகி புலம்பும் உன்தன் காதல் அஞ்சுகம்

நினைவிலும் நீ, என் கனவிலும் நீ
விழிப்பில் நினைவாகி பிரிவு என்னைக் கொல்ல
கனவில் நிலவாகி நெஞ்சை நிறைக்க,
கண்ணாளா திருமுகம் காட்டு

உன்னைப் பிரிந்து நான் வாட, என்னைப் பிரிந்து
நீ வாட,-என் மேனியிலே பசலை,
என் விழிகளிலே கண்ணீர்த் திவலை-இருவர்
உள்ளங்களிலும் அலைபாயும் சோக அலை

## தனிப்படர்மிகுதி- தனிமைத் துயரம்

- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -

இருமனம் ஒத்து ஒருமனமாகிப் பிறந்த காதல்
தெய்வீகமானது, மனமழிந்திட நான் அல்ல
இருப்பது நீயே என்ற மேன்மை-தலைவிக்கு
விதையில்லாத் தேன்கனியாய் இனிக்குது



நீயின்றி நான் வாட என் மனமோ மழை காணப்
பயிரானது, கண்ணாளா, உன்னைக் கண்டு மனம் மலர
உன வரவோ பருவத்தே பெய்யும் மழையானது
கன்னி மனம் காதலாகிச் சிலிர்க்குது.



கண்டதும் உன்னைத்தான் காதல் கொண்டதும்,
கைத்தலம் பற்றியதும் உன்னைதான், என்னையன்றி
நீ அன்பு செய்ய என்னைத் தவிர வேறு பெண்ணில்லை
எண்ணமே இனிக்குதடா, நெஞ்சில் கர்வம் பூத்ததடா

கற்பிருந்தும், பொற்பிருந்தும் மாதரசி என நற்பெயர்
இருந்தும், கண்ணாளளா என்னை நீ கண் நோக்கவில்லை எனில்,
வண்ணம் கலைந்த ஓவியமான என்தன் வாழ்வு இழிவே

ஆயிரத்தில் ஒருவனாய் உன்னைக் கண்டேன், ஒரு தலைக் காதலில்
என்னை இழந்தேன்-காதலே, என் காதலை நீ ஏற்காவிடில்
என்னிலைதான் அந்தோ பரிதாபம், ஒற்றைக் குயிலின் தாபம்



இரு மனம் ஒத்த காதலே இன்பம், ஒரு தலைக் காதலோ
பெருந்துன்பம், தந்தி அறுந்த வீணை தவிக்குதடா
புழுதியில் விழுந்த பூமாலையாய் மனம் நோகுதடா



என் மனதின் ஏக்கம் நீ அறியாயோ? காமன் கணைபட்டு
வேடன் கணபட்ட மானாய், வாடும் என் உள்ளத் துயரை,
காமனும் அறியாத வேதனையை, காதல் நெஞ்சே அறியும்

கண்டாய், காதல் கொண்டாய், பிரிந்து சென்றும் இனிதாய்
ஒரு மொழியும் கிட்டாத பெண்மை வாழ்ந்தும் பலன் என்ன?
பூ மனம்தான் கல்லாய்ப் போனதென்ன? காதல் வரமா? சாபமா?

விரும்பாததை அடைவதும், விரும்பியதை அடையாததுமான வாழ்வில்
மனம் விரும்பியவர் புகழ் காதுக்கு கான மழையே, நெஞ்சே புலம்பாதே
நேசமில்லாதவரிடம் காதலை இரஞ்சாதே, மனத் துயர் நீங்க
மனமே மறந்துவிடு, ஒரு தலைக் காதலைத் துறந்து விடு

# நினைத்தவர் புலம்பல்

\- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -





உண்ட மது தரும் போதையோ சிற்றின்பம்,
நினைத்தளவிலே நீங்காத இன்பம் தரும்
என்னவள் காதல் போதையோ என்றும் பேரின்பம்

பிரிவிலும் நினைத்திட பேரின்பம் தரும்
உண்மைக் காதல்போல் இன்பம் உலகில்
ஏதும் உண்டோ, மனமே சொல்

வந்த தும்மலும் வராமல் போனதென்ன?
நினைத்தவர் என்னை மறந்தாரே?
நேசம் துறந்தாரோ? துடிக்கும் என் நெஞ்சம்

என் நெஞ்சிலே என்றும் காதலே நீதான்-
அதுபோல் உன் நெஞ்சிலும் நானிருப்பேன்
நினைவில் நீங்காதிருப்பேன், தவிக்கும் மனசு

உன் நெஞ்சில் நானில்லை-ஆனால்
என் நெஞ்சில் உன்னைத் தவிர யாருமில்லை
நாணமின்றிச் சொல்லும் நங்கையின்
காதலுக்கு வெட்கமில்லை போலும்





உன்னோடு வாழ்ந்த காலம்- காலத்தால்
அழியாத பண்ணோடு பிறந்த நாதம்
உயிரில் கலந்து வாழ்வளிக்கும் இதய கீதம்

நினைக்கத் தெரிந்த மனதிற்கு மறக்கத் தெரியவில்லை,
பழகத் தெரிந்த உயிருக்கு விலகத் தெரியவில்வை
உன் நினைவே என்தன் சுவாசம், மறந்தால்
மனதில் சருகான மலரின் வாசம்

என் மனமும் நீ அறிவாய், என் எண்ணமும் நீ அறிவாய்,
உன்னை எண்ணி இன்புறும் என் மனதை ஒருபோதும்
என் காதலர் துன்புற விடமாட்டார், எண்ணமே
இன்பமாக, இறகு விரித்துப் பறக்கும் கன்னி மனசு

இருவரல்ல ஒருவர் என்று சொன்னவர் என்னைப் பிரிந்திட
எண்ணி மாயும் கன்னி மனசு, நிலவே நீ வாழி,
என் நெஞ்சத்தில் இருந்தவரை தேடிக் காணும் வரை
தேயாதே, அமாவாசை எனக் கண் மறையாதே

# கனவு நிலை உரைத்தல்

---

கனவில் வந்து காதல் தூது உரைத்த நீயோ
என் நெஞ்சுற்ற காதல் காயங்களுக்கு அருமருந்து
நேரில் வந்தால் நமக்கு நாமோ காமன் விருந்து

மையுண்ட மலர்க் கண்கள் மயங்கி உறங்கினால்
காதல் மயக்கத்தில் வரும் கனவில், மாது உரைப்பாள்
சேதி, கண்ணாளா உன் அடியாள் நலம் என்று





நனவில் வந்து அன்பு செய்யாத காதலரை
கனவில் கண்டதனால் என் காதலும்,
உயிரும் களிப்போடு இன்றும் வாழுதடி தோழி

நனவில் காணாத காதலரைக் கனவில்
கண்டதனால் உற்ற காதல் இன்பத்திற்கு
நிகர் உலகில் ஏது தோழி

நனவில் சுகிர்த்த காதல் இன்பமும், இன்று
கனவில் சுகிர்த்த காதல் இன்பமும் வேறில்லை
நனவிலும், கனவிலும் கிடைத்த காதல் இன்பம்
அமுதிலும் இனிதடி ஆருயிர்த்தோழி



நனவின்றிக் கனவிருந்தால் கனவில் வந்த
காதலர் என்னைப் பிரியார், பிரிவின்றி
உறவிருந்தால் வாழ்வில் நிலைக்கும்
காதலோ பேரின்பம்



நேரில் வராது நினைவில் நின்று வாட்டுபவர்
கனவில் மட்டும் தவறாது வந்து வருத்துவது
முறையோ? காதலே இது சரியோ?

விழிப்பிலே நினைவாகி, உறக்கத்தில்
கனவாகி, என்னை வாட்டும் கண்ணாளா,
நெஞ்சமும் உனதாகி, நேசமும் உனக்கென்றாகி
நீயின்றி வேகும் என் மலர் மஞ்சம்

என்னை மறந்தாய் நீயென்று ஊரார் பழிக்க,
உறவுகள் துடிக்க, நாளும் என் கனவில் நீ
உன் நனவில் நான், யாருமறியாத-காதலர் நாம்
மட்டும் அறிந்த சேதி, மனதிலோ ஆனந்த ஜோதி

# பொழுது கண்டு இரங்கல்

- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -

மயக்கும் மாலைப் பொழுதே போ, போ. இனிக்கும்
இன்ப இரவே வா, வா-அன்று ஒன்றாய் ஒருயிரும்
ஈருடலுமாகிப் பாடிய கானம், இன்று உயிரையும்
ஊனையும் கொல்லும் பிரிவாய் என் மனதிலே ஊனம்





அழகிழந்து வாடிய மலர் மாலையாய்
அந்திப்பொழுதே நீயும் வாட
அன்புக் காதலரும் உன்னைப் பிரிந்தாரோ?

இருளும் வளர மனதை வாட்டும் பிரிவுத் துயரம்
வளரும், கருவானில் அலையும் மேகத் துண்டுகளாய்
நொருங்கிய மனம், கண்ணாளனே உன்னைத் தேடும்

இரவே வளராதே, என் மனத்துயரைக் கூட்டாதே
நிலவே மறையாதே, என் கண்ணாளனிடம்
காதலி என் துயரைக் கூற மறவாதே

அன்று காதலர்க்கு இன்பம் தந்த அந்தி மாலை
இன்றோ மனம் கனத்திட துன்பமான வேளை
மாலை வளர, மயக்கும் இரவு துளிர்க்க
காமநோயுற்று வாடும் கன்னி மனது



அன்று கண்ட நிலவினால் நெஞ்சிலே காதலின் பேரின்பம்,
இன்று வந்த நிலவினால் நெஞ்சிலே பிரிவின் பெருந்துன்பம்
நினைந்தழ கண்ணாளா நீ தந்த காதல் குபேரநிதி
இன்று கனவாய்ப்போன காதலோ ஊராருக்குச் சங்கதி



அந்திப் பொழுதில் அன்று நீ அள்ளித் தந்த
இன்பமோ நினைவானது, கனவானது
நாளும் வரும் அந்திப் பொழுதோ-நீ தந்த
இன்பத்தை எண்ணியழ துன்பப் பொழுதானது

காலையில் அரும்பாகி, அந்தியில் மலரும்
அந்தி மந்தாரையாய் காமம் என் நெஞ்சில் பூத்துச் சொரிய,
தென்றலும் தீக்குது, தேனிலவும் தகிக்குது

காதற் காமத்தால் காயமான கன்னி மனம் இங்கே
வாட, பொன் தேடி அங்கே நீ வாட, நமக்காய்
காயும் நிலவும் சோகத்தில் தேயுதடா

# உறுப்பு நலன் அழிதல்

---

தூக்கம் துறந்த விழிகள், துக்கத்தில் நிலைக்க,
வெட்கம் மறந்த விழிகள் சூனியத்தை வெறிக்கத்,
விம்மலோடு, மெல்லத் துளிர்க்கும் கண்ணீர்



கண்டாய், கண்களால் காதல் மொழிந்து-வீணையாய்
கன்னி என்னை மீட்டி காதல் பாசுரம் படித்தாய்,
நெஞ்சிலே சோகம் நிறைய, செவ்விழிகளில்
கண்ணீர் நிலைக்க, ஏனடா கண் மறைந்தாய்?



நிறையிழக்காத என்னிடம் காதலே நீ கண்ட
குறையென்ன? சுருதி கூட்டி நீ இசைத்த
மோகனம் மௌனிக்க, உன் வீணையிலோ
சோகப் புழுதி, மலராத இதயத்திலோ கசியும் குருதி

ஏன் மறந்தாய் என்னை? கூவும் குயிலும், அகவும் மயிலும்,
கொஞ்சும் அஞ்சுகமும், தன் துணையை மறக்கவில்லை,
என்னை நீ மறந்ததென்ன? அனலில் விழுந்த
புழுவாய், என் இதயம் துடிப்பதென்ன?

கண்களால் என் நெஞ்சில் காதலை நீ எழுதி,
கயல்களால் உன் அழகைப் பருகத் தந்து -நெஞ்சில்
காதல் விடாய் வளர்த்தே, பின் கண் மறைந்தாய், உன்
வண்ணக் காற்றாடி, நூலறுந்து புழுதியில் வாடுதடா



கொடியிடை வளைய என்னை இறுக அணைத்து
கொவ்வைச் செவ்வாயில் அமுதைச் சுவைத்து
மலைத்தேன் என மலைத்தாய், இன்று மூட்டிய காமத் தீ
என்னை எரிக்க, நீயோ கண் மறைந்தாய்?



பாடியழைத்தும் உன்னிடம் பதில் இல்லை
வாடும் உன் சோடிக் குயில்,
ஆடி அழைத்தும் உன்னைக் காணவில்லை
கண்ணீர் மழையில் காலுடைந்த உந்தன் தோகை மயில்

கண்டு மகிழ்ந்த குவளை விழிகளில் கண்ணீரை வைத்தாய்,
பேரழகன், உன்னை உண்டு பருகிய பூ நெஞ்சத்தில்
சோகப் பூகம்பத்தை விதைத்தாய், வலிக்குதடா
என் நெஞ்சுக்குள் ஏழ் கடலின் சோகம்
இதயவீணையிலோ நாளும் ஓயாத முகாரி ராகம்

# நெஞ்சோடு கிளத்தல்-மனத்தோதடு பேசுதல்

---

பூ முகம் உன்னைக் கண்டு பூத்தாட-நாளும்
நீயே என்தன் உதயம், நீல விழிகள்
நீர் சிந்திச் சிவக்க-நீயில்லாத பொழுதெல்லாம்
இன்றோ, எனக்கு அஸ்தமனம்



மின்னலும். இடியுமின்றி என் விழிகளில்
கண்ணீர் மழை, ஒரு செய்தியும், மொழியுமின்றி
உன்னை எண்ணித் துடிக்கும் இதயம்
பொன்மேனி எங்கும் மெல்லப் படரும் பசலை



உன்னை நினைந்திட நெஞ்சிலே பூ மழை
என்னை மறந்து பொருள் தேடி நீ அலைந்திட
பூவிழிகளிலோ ஓயாத கண்ணீர் மழை

காதல் மழையால் நிறைந்த நெஞ்சில்
இன்று கண்ணீர் மழை, விரகதாபத்தால்
வருந்தும் மனதில், வேதனையின் எழுச்சி,
பொன் மேனியிலோ பசலையின் திரட்சி

பொழுதே புலராதே. நிலவே மலராதே என
காதலாகிப் பொழிந்த மொழிகள் கண்ணீரில்
நனைய, என்னை வாட்டும் மயக்கும் மாலை,
என்னை எரிக்கும் இன்ப இரவு



பொருள் தேடிப்போன உன்னோடு நிழலாகித்
தொடரும் என்தன் நினைவை நீ அறிவாயா?
கண் மூடித்துயிலும் போது நீயோ இன்பக் கனவு,
கண்ணாளா சீக்கிரம் வருவாயா?



நினைக்குந்தோறும் உயிர்க்கின்றேன், உன்னைப் பிரிந்து
கணந்தோறும் பனியாய்க் கரைகின்றேன், உயிரோடு
கலந்த உறவே-உன்னைப் பிரிந்தால் மரணமே என் உறவு

கண்ணாளனே உன்னைக் காணாமல் தேய்கின்றாள்
உன்தன் தேன் நிலவு, நிலவே தூது செல்

ஒற்றைக் குயிலாக் கரைகின்றாள்
உன் சோடிக் குயில், புள்ளிக் குயிலே-என்னவரிடம்
என் துயரைப் பாடிச் சொல்

# நிறையழிதல்-மன அடக்கம் குலைதல்

-------------------------------

தேவரையும், முனிவரையும், மன்னரையும், நிலைகுலையவைத்து-
மேன்மையைச் சிதைக்கும் காமக் கோடரிபோல் உலகில் ஏதுமுண்டோ?
ஞான புத்தரையும் வீழ்த்திட, மாறன் ஏவிய காமன் கணை,
மலர்க்கணையால், சினந்து மன்மதனை எரித்த சிவனார் கதை





உயிரோடு ஒன்றாய்க் கலந்து பருவத்தே
விழிக்கும் பாலுணர்வு, பல்கிப் பெருகி
பூமியை நிறைத்திட, படைத்தவன்
அருளிய இன்பப் பேருணர்வு

உயிர் மெய்யோடு கலந்த உணர்வு, காமனை
வெல்ல இல்லறமே நல்லறம் என இயம்பிடும்
வள்ளுவர் பெருமான் வாசுகியோடு
இன்புற்று சுகிர்த்த இன்பத்துப்பாலான தரவு

விழிப்புணர்வோடு காமம் கடந்தால் நம்மில்
கடவுள் நிலை, கஜீராகு சிற்பங்கள் வெளியே,
கடந்து உள்ளே நுழைந்திடக் காண்பது பரவெளிய



ஊடலாகிப் பிரிந்த உறவும், நாணமின்றி
ஒன்று கூடக் காதலரை வருத்தும் காதற் காமம்
மனதில் நின்று அறிவை ஆட்டுவிக்கும் பாலுணர்வு
காதலாகி இன்புற இறை தந்த ஆண் பெண் உறவு



தும்மலும், காமமும் வருவது தெரியாது
மறைவதும் புரியாது, அடக்க முடியாது
அதிசயத் தீ, அடங்காமையால் நாணத் தாளிட்ட
நிறை என்னும் கதவை உடைத்தெறியும் கோடரி

நம்மை வெறுப்போரையும் விரும்புவது
காமம் ஒன்றே, வெட்கம் அறியாது பிரிந்து மீண்டும்
வந்தவரோடு பிணங்கிடச் சென்றும்,
பிழை மறந்து உறவாடுவது காதலர் உறவே

நெய் வளர்த் தீயில் இட்ட நிணம்போல் உருகித்
தவிக்கும் இள நெஞ்சத்து நங்கையருக்கு
பிணங்கி பின் கூடுவோம் என்பது கனவு
காதற் காமமோ தெய்வீக உறவு

# அவர்வயின் விதும்பல்-காதலரைக் காணத் துடித்தல்

---

உன்னைக் காணாது என் நிறை நெஞ்சம் ததும்புதடா,
உன் ஒரு மொழி கேளாது பூஞ்செவிகள் வாடுதடா
உன் அணைப்பின்றி பசலையால் வாடும் பொன்மேனி
துடுப்பின்றி அலை கடலில் தள்ளாடும் உன் காதல் தோணி



கண்ணுக்குள் மணியாகி, நெஞ்சுக்குள் நினைவாகி
பூவுக்குள் தேனாகி இனித்த உறவு, உன்னைக்
காணாமல் கலங்கிட, மாலையும், இரவும் என்னை
எரித்திட, பூ விழிகள் கரையுதடா



நெய்யின்றி, மலரின்றி கார் குழல் கலைய
மையின்றி தையலாள் சேல் விழி குலைய
மாலையும், இரவும் தீயாய் வருத்த, மெலியும்
மெய், உன் அணைப்பின்றி நழுவும் மேகலை

மெய் சிலிர்த்து, உயிர் இனிக்கக் காதலாகி
மயங்கிய மங்கை, யாழும். குழலும் பண்ணிசைக்க
காமவேதம் பாடிய நங்கை, உன்னைக் காணாத
விழிகளிலோ கங்கை, பூ நெஞ்சத்திலோ காங்கை

காதல் என்றது இதயம், ஊடல் சொன்னது மனம்
கட்டித் தழுவிட மோட்சம் என்றது அன்னம்
இன்றோ கண்ணீரில் நீராடி, உன்னைக் காணாத்
தவிக்கும் ஓவியத்தில் ஏது காதல் வண்ணம்?

அறமிருந்தும், அரிய காதல் இன்பம் இருந்தும்
பொருள் தேடிப் பிரிந்தவனை நினைத்துப் புலம்பும்
நெஞ்சம், நீயோ என் பதுமநிதி, நானோ உன்
குபேர நிதி, நமக்கேனோ அழியும் நிதி?





கண்ணக்கு நிலவாகி, நெஞ்சுக்கு காதல் மலராகிப்
பூத்த உறவு, பிரிவோ நெஞ்சைத் எரிக்கும் தீயாக,
உயிரை மாய்க்கத் துடிக்கும் உறவு-என்
கண்களுக்கு நீயோ அருமருந்து, கான வரம் கொடு

கண்டு அரும்பிய பூ மனதில் காதல் மழை,
காதல் இன்பம் சுகிர்க்க வாழ்வில் தேன் மழை
பிரிவு வருத்தும் விழிகளிலோ கண்ணீா மழை
உன்னைக் கண்டால் நெஞ்சிலே தேன் மழை

## குறிப்பறிவுறுத்தல்

- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -

விழிகளுக்கு மோகனமாகி, செவ்வாய் அமுதோ தேனினமாகி
நுகர்வதற்கு பூ மணமாகித் தழுவிட இளந்தென்றலாகி நெஞ்சைக்
கொள்ளை கொண்ட காதல் கொள்ளைக்காரி,
சேல்விழிகளிலோ மையல், தேன் மொழியிலோ கவிதை



படிப்பதற்கு காமவேதம், பருகிட அமிர்தயோகம்,
காமனை வெல்லும் மந்திரம், என்னை ஆட்கொண்ட
சுந்தரம்? என்னவளோ நான் ஓதிடும் திரு மந்திரம்
மும்மகளும் இணைந்த பெண்மையின் அவதாரம்,



மைவிழி கரைந்து மலர் மெய் வாட, கார்குழல்
குலைந்து சூடிய மலர் வீழ, நூலிடை மெலிந்து
மேகலை நழுவிடக், காதலாகி என்னை வரித்த மனம்
பிரியாதே எனச் சொல்லாமல் சொல்லும் குணம்

முத்தம் சுவைத்து செவ்வாய் சிவக்க, கட்டியணைத்து
கைவளை சினுங்க, புள்ளி மானாய்த் துள்ளிய
கால்கள் துவள, பள்ளியறைப் பஞ்சணை கசங்க
சொல்லும் மொழியில் பிரிவின் சோகம்

பிரிவை எண்ணிட கண்ணீர் எழுதிடும் மடலோ
சோகக் கவிதை, இயம்பிடும் மொழியில்
விசும்பலின் நாதம், இட்ட அடியில் இடை
மெலிந்து நடை சோரப் போகாதே என்ற பாவம்



மதிமுகம் தேய்பிறை காட்ட,  மலர்க்
கூந்தல் கோடை எனக் கூற, கயல் விழிகள்
கண்ணீரில் நீராட, இடை மெலிந்து நழுவும்
காஞ்சி, பிரிவை எண்ணிப் புலம்பும் வஞ்சி



கைவளை காட்டி, நெய் வார்த்துக் கட்டிய கார்குழல்
மலர் காட்டி, மெல்லிடை மேகலை காட்டி, மென்தோள்
காட்டி, உன்னைப் பிரிந்து வாழேன், உடன் வருவேன் என
பஞ்சுப் பாத கொலுசு குலுங்கச் சேதி சொன்ன தேவி

வானைப் பிரிந்து வாழுமோ நிலவு, துணையைப்
பிரிந்து வாழுமோ அன்றில்?. கடலைத் தேடி
ஓடும் நதிபோல் நெஞ்சம் உன்னைத் தேடும்-கார்கால
மழை பொழிந்து போகாதே எனத் தடை போடும்

# புணர்ச்சி விதும்பல்-கூடுவதற்கான துடிப்பு

- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -

கண்ட அளவில் தோன்றும் காதல் கிளர்ச்சி,
நினைந்தளவில் நெஞ்சம் நிறைக்கும் காம உணர்ச்சி,
காமம் உற்றாருக்கே உண்டு, கள்ளுண்டார்கில்லை



உண்டால் வருவது மதுவின் போதை-மாதிவளைக்
கண்டளவில் வருவதோ காதலின் போதை



கள்ளிலும் போதை காதற் காமம்-ஒன்றாய்
கருத்தையும், நாணத்தையும் எரிக்கும் தாபம்
பனையளவு காமம் மனதில் பெருகும்போது
தினையளவு ஊடலின்றி கூடுதல் காதலுக்கு இன்பம்

ஊட நினைத்துச் சென்ற நெஞ்சம், வெட்கமின்றிக் கூட
நினைத்ததடி தோழி,?.காமம் என்னைப் பாழாய்ப் படுத்துதடி

காணும்போது மனதில் கூடலின் இன்பம், காணாதபோது
மனதில் தோன்றும் காதலர் குற்றமோ ஊடலின் விம்பம்

வெள்ளமாய் உள்ளத்தில் பாயும் காதற் காமத்தில்
போடும் எதிர் நீச்சலாய் ஊடல், அறிந்தும்
ஊடிப் பின் கூடிக், கோடி உவகையுற்றேன் தோழி

மது உண்டவருக்குத் தீங்கு செய்தாலும், மதுப்பிரியர்
மனம் மாறுதில்லை, மதுவாய் இனிக்கும் உன் மார்பும்
மாது என்னை வருத்துதடா, உன்மார்பில் சாய
உன் கன்னி மனம் துடிக்குதடா





கண்ணகிபோல் கணவர் குற்றம் அறிந்து பிணங்கி,
கண்டதும் காதற் காமத்தால், மாதவியாய் மாறி
அணைத்து உற்ற இன்பம் காவியமடி தோழி

கண்ணாள் பிணங்கி, கருத்தால் சுணங்கியவள்
கண்டதும், செம்புலப் பெயனீர் போல்
அன்புடை நெஞ்சந் தாம் கலந்திட இன்பம் தந்தாள்

மலரிலும் மென்மை காதற் காமம், மனதறிந்து
துய்த்து இன்புற்ற காதலர் உலகில் சிலரே
மற்றோர் காமத்தில் விழுந்த பதரே

# நெஞ்சோடு புலத்தல்-மனத்தோடு ஊடுதல்

---

என் நெஞ்சே என்னை மறந்தவரை வையாது
எப்போதும் அவரை நினைந்துருகுவதும்
முறையோ? காதலுக்குச் சரியோ





நெஞ்சே என்னை விரும்பாதவர் மேல்
நீ கொள்ளும் விருப்பம் முறையோ?-கண்டதும்
அவர் நெஞ்சோடு சேரத் துடிப்பதும் சரியோ?

என் நெஞ்சே என்னை விட்டுப் பிரிந்த
காதலர் பின் செல்லக் காரணம் ஏது?-என்னவருக்கு
யாருமில்லை என்ற கழிவிரக்கமா? கூறு

கிட்டாத காதலை எண்ணி அஞ்சும் நெஞ்சே
கிட்டியவர் நம்மை விட்டுப் பிரிவாரோ
என்றெண்ணி பின் அஞ்சும்

சேர்ந்தவர் பிரிந்திட நெஞ்சிலே தீராத சோகம்
ஒன்று சேருமோ இரு மனம் ஏங்கிட
என் நெஞ்சே என்னைத் தின்பதுபோல் துன்பம்

நினைக்கத் தெரிந்த மனதிற்கு மறக்கத் தெரியவில்லை
பழகத் தெரிந்த உயிருக்கு விலகத் தெரியவில்லை
நாணம் துறந்து கானம் பாடும் குயிலாய் என்னிலை





பிரிந்தவரை எண்ணி உருகும் நெஞ்சம்-தன்னை
மறந்தவர் மேன்மையை நாணம் துறந்து
எண்ணி மகிழும்

என் நெஞ்சே எனக்குத் துணையில்லை என்றால்
எவர்தான், இடர் வரும் காலத்தே துணை வருவார்
நம் நெஞ்சே நமக்கு பகையானபோது, உறவும்,
ஊரும் துணை வருமோ?

ஊடல் செய்து பின் கூடல் இன்பம் துய்த்திட
நெஞ்சே நீ மறந்தாய், நிம்மதி இழந்தாய்
யார் இனிப் பேசுவார் உன்னோடு-ஊமைக் குயிலாய்
நெஞ்சம் உருகிப் பாடும் கானத்தில் மௌனராகம்

# புலவி- காதலர் பிணக்கு

- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -





ஊடலால் உற்ற அல்லலைக் கூடித் தணிக்க சோடிக்
குயிலுக்கு மனமில்லை-நெஞ்சே கொஞ்சம் பொறு,
காதற் காமத்தால் என் காதலர் படும் பாட்டை பார்
-
ஊடலும் உப்பளவே, கூடினால்-காதலர்க்கு
காதலும் உவர்க்கும் சுவையே

ஊடலால் வாடும் நெஞ்சை கூடி மகிழ்தலே
பெண்மைக்கு அழகு, ஊடி நின்றால், காதலர்க்கு
உற்ற காதலே பெருந்துன்பமாய் மாறும் இழிவு

ஊடலால் வாடி நின்ற வஞ்சியை
கூடித் தேற்றாத காதல், வாடிய வள்ளிக்
கொடியின் வேரை அறுப்பதுக்கு ஒப்பாகும்

மைவிழி மகளிர் நெஞ்சத்து ஊடலே
பண்பார்ந்த காதலர்க்குப் பெருமை

ஊடிப் பின் கூடிக் களிக்க புலவியும்,
துனியும் இல்லாத காதல் இல்லறம்,
அழுகிய கனியும், பிஞ்சுமாய் மாறிடும்

கூடிச் சுவைத்த கோடி இன்பம் இனி வாராதோ
என ஊடலில் ஏங்கும் மனம்- பின் காதலில்
நிலைத்து நாளும் கொண்டாடும் காதலர் தினம்





எம்மை நினைந்தும் வருந்தும் நெஞ்சம்
காதலருக்கு இல்லாதபோது, நெஞ்சே நீ அவரை
நினைத்துப் புலம்புவது என்ன நியாயம்

ஒருவரை ஒருவர் சுவைத்து, இருமனம்
ஒருமனமாக இருவர் கண்ட பேரின்பம்-காதல்

பிறை நுதல் தொட்டு, பங்கயப் பாதம் வரை
இதழாள் அளந்தேன்-
இவள் மலைத்தேன் என மலைத்தேன்

நிழலில் அமைந்த நீர் நிலைபோல் குளிர்ச்சியானது
என் நான் அன்பரிடம் கொள்ளும் ஊடல்

# புலவி நுணுக்கம்-பிணக்கின் நுணுக்கம்

- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -

மோகத்தால் வாடி விரகதாபத்தால் மங்கையர்
தம் சேல் விழிகளால் உண்டு எச்சில் படுத்திய
நின் மார்பழகை-பரத்தனே, நான் இனிச் சேரேன்
கோபித்த என என் காதலியின் கூற்று, மனமே தேற்று

ஊடல் கொண்டு காதலால் வாடியிருந்தபோது
ஊடலை விடுத்து, நீடுழி வாழ்க என வாழ்த்திக் கூடுவாள்
என்றெண்ணி தும்மினார் என் துணைவர்
நானோ வாய் மூடி வாளவிருந்தேன்

கண்படும் என்னழகை எந்தப் பெண்ணிற்கு
காட்ட-கண்ணாளா எந்தன் கார்குழலில்
மலர் சூடினாய் என்று என்னைச் சீண்டினாள்

மாதரசிகளில் எல்லாம் என் மனங்கவர்ந்த
காதல் பேரரசி நீ என்றேன், யாரந்த மாதரசிகள்
என்று பிணங்கி என்னோடு ஊடினாள் என்னரசி



இப்பிறவியில் நான் உன்னைப் பிரியேன் என்றேன்
அப்படியானால் இனிவரும் பிறவியில்
பிரிவீரோ என விழி நீர் சிந்த விம்மினாள்

உன்னை நினைத்து என்னை மறந்தேன் என்றேன்
மறந்ததனால் என்னை நினைந்தீரோ என்று
ஊடினாள் என் மனங்கொத்திப் பறவை



தும்மினேன், நூறாண்டு நீடுழி வாழ்க என
வாழ்த்தியவள், எவள் உம்மை நினைத்தாலே
என ஏங்கித் என்று துயர் கொண்டாள்

ஊடுவாள் என அஞ்சி வந்த என் தும்மலை
அடக்கினேன், ஓ! உம் மனதில் நிறைந்தவளை
மறைப்பதற்காவா, தும்மலைத் துறந்தீர் அழுதாள்,

பணிந்து பங்கய முகம் மலர, பாசம் பொழிந்திட
ஓ நீர் இப்படித்தான், மற்றப் பெண்களிடமும் பணிந்து,
பாசத்தைக் கொட்டுவீரோ எனச் சினந்தாள்
சொல்ல மொழியின்றி வாய் குளற,
மெல்லிடை பற்றி பூங்கொடியை அணைத்தேன்

வான்மதியோ, தேன் மலரோ நின் முகம் என வியந்தேன்
எவளோடு எனனழகை ஒப்பிட்டீர் எனச் சினந்தாள்

அழைபேசி அழைக்க, அஞ்சினேன், வஞ்சிக் கொடி
ஊடலைத் தணிக்கமுன் அழைத்தவரோடு பேசினாள்
தவிப்பள், அழுவாள், ஊடலை வளர்ப்பாள்
என்று அழைப்பைத் தவிர்த்திட துண்டித்தேன்

ஓ! எவளோ ஒருத்தி உம்மை அழைக்கிறாள், காதல் மொழி
பேசத் துடிக்கிறாள் போலும், இன்னும் எத்தனை
பெண்களிடம் உங்கள் காதல் தொடர்பு சினுங்கினாள்

உன்னிடம் மட்டும்தான் என் இதயம்
நீதான் என் காதலின் உதயம் என்றேன்

உதயம் இருந்தால் அஸ்தமனமும் உண்டு
இரவில் பெண் நிலவைத் தேடும்
காதல் களவனோ நீர், என்னைச் சீண்டினாள்

அழைபேசியை எடுத்துப் பார்த்வள், எண் உண்டு
பெயர் இல்லை-ஓ பெண்களின் பெயர்களை மறைத்து
எண்களால் பேசும் காதல் கள்வன் நீரோ

நான் அழைக்கும் போதெல்லாம்
அழைபேசியில் தொடர்பில்லை-எப்போதும்
தொடர்பில் எவளோ ஒருத்தி போலும்

ஆசையாய் காதல் மொழியில்லை, கவிதை
மொழிவதில்லை, பூவோ, பொன்னோ பரிசாய் இல்லை
உம் மனதில் நானும் இல்லை போலும்

முகநூலிலும் நம் காதல் இல்லை, முகம் தெரியாத
உலகறியாத பெண்ணாய் உம் காதலி என் நிலை-அதனால்தான்
இன்னும் கன்னியர் உம்மைத் துரத்துகின்றார்
காதல் மொழியத் துடிக்கின்றார் போலும்

ஊடலை முடிக்க உத்தமியை அள்ளி அணைத்து, என் நெஞ்சில்
நீயிருக்க, எதற்கடி முகநூலில் உன் மதிமுகம்-உன் அழகைக்
கண்டு, காளையர் நெஞ்சம் காதலால் வாடுமே, வருந்துமே
என்மீது பொறாமை கொள்ளுமே -உன்னைப்போல் அழகி, அவர்கட்கும்
வேண்டுமென்றால், மற்றக் கன்னியர் நிலை பரிதாபமே

# ஊடலுவகை

‐ ‐ ‐ ‐ ‐ ‐ ‐ ‐ ‐ ‐ ‐ ‐ ‐ ‐ ‐ ‐ ‐ ‐ ‐ ‐ ‐ ‐ ‐ ‐ ‐



தவறில்லை அவரிடத்து என்றாலும்
தவறாது கொள்ளும் ஊடல்
காதலுக்கும், கூடலுக்கும் இன்பம்



ஊடலால் , என்னவர் மனம் வாடினும்,
கொள்ளும் சிறு துன்பம் பேரின்பமே

மண்ணோடு, மழை கலந்தாற்போல் நெஞ்சம்
கலந்த காதலரிடம் , ஊடிப் பெறும் பேரின்பத்தைப்போல்
இன்பம், தேவலோகத்திலும் உண்டோ?

ஊடலினால் வரும் பேரின்பக் கூடலோ
அந்த ஊடலில்தான் உள்ளது, என் மனவுறுதியைக்
குலைக்கும் மலர்க்கணையும் அங்கேயுள்ளது

உள்ளம் கொள்ளை கொண்டவளின் ஊடலுக்கு ஆளாகி ,
கூடலின்றி உள்ளம் பிரிந்து நிற்பதும் இன்பம்-பின்
கூடித் துய்த்திட கோடிப் பேரின்பம்



உண்டது சமிப்பது உண்பதிலும் சிறந்தது
அதுபோல் கூடிக் கலப்பதிலும்
ஊடி இன்புறுவது காதலுக்கு இனியது



ஊடலில் பணிந்து தோற்றவருக்கே வெற்றி
உடிப் பின் கூடி இன்புறத் தோன்றும் உண்மை
உண்மைக் காதலில்தான் உண்டு

நெற்றியில் வியர்வை அரும்பிடக் கூடும் பேரின்பம்,
ஊடலினால் கிடைத்த உவகையன்றோ, ஆதலால்
ஊடுதல் கூடுதலுக்கு இன்பமன்றோ?

இரவே விடியாததே, என் மலர்க்கூந்தல் பேரழகி
மனங்குளிர ஊடலே தணியாதே இரஞ்சும் காதல் மனம்
காமத்திற்கு இன்பம் ஊடல், ஊடல் முடிந்து
கூடித் தழுவுதல் ஊடலுக்கு இன்பம்

உன் தழுவலில் உறும் பேரின்பம் சீதளத் தென்றலும்
தராத இன்பம், முக்கனியிலும் பெருஞ்சுவை உன் முத்தச் சுவை,
நித்தம் சுவைத்தும் திகட்டாத அருஞ்சுவை

# ஒரு தலை ராகம்

\- - - - - - - - - - - - - - - - - - - - - - - - -

செவ்விழிகளிலோ ஈரம், நெஞ்சினிலோ ஆறாத காயம்
ஒரு தலைக் காதலால் வாடும் உள்ளம்-கன்னி
உன் காதல் கிடைத்தால் வாழும்-இல்லையேல்
தரையில் விழுந்த மீனாய் துடித்துச் சாகும்





என்னை விரும்பாத உன்னை-விரும்பியது
என் விதியா? என் இதயவீணையில்
நான் மீட்டுவதும் உனக்குப் பிடிக்காத
ஒரு தலை ராகமோ?

உன் விருப்பமே என் விருப்பம்
உன் வாழ்வே என் வாழ்வு
எங்கிருந்தாலும் வாழ்க-உன்தன்
இதயமும் அமைதியில் வாழ்க

மறக்கத் துடிக்கின்றேன் முடியவில்லை
நினைத்து தவிக்கின்றேன்-விம்மலிலோ
முகாரியின் ஆலாபனை, என் நொருங்கிய
இதயமோ தந்தி அறுந்த வீணை

கங்கையை என் கண்ணில் வைத்தாள்,
காங்கையை என் நெஞ்சில் வைத்தாள்-காதலை
மட்டும் என் இதயத்தில் வைக்க ஏனோ மறந்தாள்





நெஞ்செல்லாம் நீயாகி, நினைவெல்லாம் உனதாகி
தேவதாஸாய்ப் புலம்புகின்றேன்-என்
காதல் அஞ்சுகமே மனமிரங்கு

கன்னி மனம் விரும்பாத ஒரு தலைக்காதல்
எனக்கோ வரம், அவளிற்கோ சாபம்

கண்கள் செய்த பாவம் உன்னைக் கண்டது
இதயம் செய்த குற்றம் உன்மீது காதல் கொண்டது
வாடிய மாலையோ புழுதியில்- இசை மீட்டிய
மரகத வீணையோ குப்பையில்

வெறிச்சோடியது என் வசந்தமாளிகை-காதல் பூகம்பத்தில்
இடிந்து தகர்ந்தது என் தாஜ்மஹால்

# ஒரு பாலினக் காதல்

------------------------------

உலகறிந்ததோ இரு பாலினக் காதல்-அறிந்தும் அறியாததாய்,
இலை மறை காயாய் இருந்து இன்று உலகு அறிய,
அங்கிகரிக்க, மதங்கள் நிராகரிக்க, ஒத்த பாலினக் காதல்





ஆணை ஆண் விரும்புவதும், பெண்ணைப் பெண்
விரும்புவதும்-பாலினம் கடந்த, இரு மனங்கவர்ந்த காதல்
உயிரியலும், உளவியலும் கடந்த பரகசியம்
இன்றோ உலகறிந்த அதிசயம்

உயிரியல் பேதம் கடந்த உள்ளுணர்வின் ஈர்ப்பாய்
ஒரு பாலினக் காதல், உனக்காய் நானும், எனக்காய் நீயும்
ஒன்றாய் வாழ்ந்தால் நம் உலகோ ஏதேன் என்னும் ஓதல்



அன்பிற்கு பால் எதற்கு? அன்பால் இணைந்த உள்ளங்கள்,
ஆண் பெண் பேதம் தடந்து, ஹரி, ஹரனாய் கூடிப் பெறும்
கோடி இன்பம், அறிதலும், புரிதலும் கடந்த அதிசய இன்பம்?

மனித மனமோ புரியாத ரகசியம்-ஏழ் கடலினும்
ஆழம் இந்த உள்ளம்- மனித மூளையோ
மகத்தான உணர்வின் இருப்பிடம், என் நெஞ்சம்
புரிந்தால் காதலே உன் நெஞ்சே என் இருப்பிடம்

காதலாகிக் கனிந்த உள்ளங்கள், தோற்றத்தில்
ஒரு பாலினமான மனிதங்கள், உள்ளத்து ஈர்பில்
நான் பாதி, நீ பாதி என்னும் அழகிய தோற்றங்கள்



காதலுக்கு கண்களில்லை, மனம் கவர்ந்த உள்ளத்திற்கு
பாலினம் தடையில்லை, இயற்கையின் விந்தை,
மானுடக் காதலின் புதிய பரிமானம்-கவிஞனின்
கற்பனைக்கு எட்டாத காதலின் பரணாமம்

உருவத்தில் ஒரு பாலாகி, உணர்வில் இரு பாலாகி
இதயம் கலந்திட யாத்த காதல் வேள்வி
இன்பத்துப் பாலாக, இரு மனம் கலந்த உறவு
ஒரு மனமாகி நறுமணமாய் மணக்கும் தேன் நிலவு

வானிலே அமுதைப் பொழியும் தேன் நிலவு
வாழ்வில் அன்பைப் பகிரும் ஒருபால் உறவு-இன்பமே



இயற்கையின அதிசய நிகழ்வு-வள்ளுவன்
எழுதாத ஒரு பால் உறவு
ஒருபால் கலந்து, இருபாலாய் உணர்வில்
இரு வரிக் குறளான இன்ப உறவு



மனிதத்தைப் பிரிக்கும் மதங்களிலோ இரத்த வாடை,
பாலினம் கடந்து அன்பைப் பகிர்ந்து இன்புறும் உள்ளங்களில்
காதலின் வாடை, விதையும், நிலமுமாய் ஆண், பெண் பாலுறவு
விதை தூவிட கருத்தாங்கிடும் தாய்மை பேரழகு

காதல் பாலினம் கடந்த இதயத்தின் மொழி
அறிவியலுக்குள் சிக்காத உணர்வின் ஆனந்தவெளி
காதலான உள்ளங்கள், ஒரு பால் உடல் கடந்து
ஒன்றாக, இன்ப வனத்தில் ஒலிக்கும் காதல் மொழி



அறிவின் பார்வையில் ஒரு பாலினம்
இதயத்தின் பார்வையில் அன்றில்களாய்
காதல் இனம், கொண்டாட நாளும்
பாலினம் கடந்த காதலர் தினம்,



மஞ்சத்திலிருந்து நெஞ்சத்தில் வந்த தேனிலவு
தேய்பிறை, அமாவாசை இல்லாத இன்ப உறவு
நாளும் பௌர்ணமி, நம் வாழ்வோ தேன் கனி

ஒருபால் காதலை அங்கீகரிக்க ஓயாத போராடங்கள்,
அன்பைப் பிரிக்க அருவெறுப்பான
மதங்களின் ஒழுக்க நெறிகளோ சூதாட்டங்கள்
காலம் மாறிட கனிந்த இதயங்களில் கொண்டாட்டங்கள்





அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்
காதல் இன்பத்திற்கும் பால் உண்டோ?
பாலினம் கடந்த “காமத்துப்பால்”
ஒருபால் இனமும் பருகிடும் இன்பத்துப் பால்

இன்பம் பொங்கும் வெண்ணிலா வீசுதே
என்னைக் கண்டு மௌன மொழி பேசுதே
தென்றல் உன்னைச் சொந்தமாய்த் தீண்டுதே
வெள்ளம்போல் ஆவல் மீறுதே

**இன்பமே சூழ்க எல்லோரும் நலம் வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-8-03-2024*

# திரு வள்ளுவர்

---

ஒன்றே குலம், ஒருவனே தேவன்!,-யாதும் ஊரே யாவரும் கேளீர்!
யாம் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகமும்-தமிழன் பெருமை
பறைசாற்றிய உண்மை- சாதி, மத, மொழி, இனம் கடந்த
வாழும் கலையாய் வள்ளுவனார் ஈந்த குறளின் மேன்மை



அறம், பொருள், இன்பம் பாடிய சித்தன்
உண்மையின் பித்தன்-முடி சார்ந்த
மன்னருக்கும் நெறி வகுத்த மாமுனிவன்



நாம, ரூபமற்ற இறைவனைத் தொழுது தொடங்கிய குறள்,
அறம், பொருள், இன்பம் வாழ்வில் நிலைக்க குறள் வழியில்
வாழ்வை யாத்தல் உன்னத வேள்வி, இருமை கடந்த
மோட்சமே வீடு, வாழும்போது இறை கடாட்சமாகும் பேறு

வர்க்க பேதம் சாராத சத்தியத்தின் கீதை
யதார்த்தத்தின் சாட்சியமாய் -வாழ்வை அறமாக்கிட
மாமுனி வள்ளுவரின் பொய்யா மொழிப் பாதை

மானுடம் உய்ய மதம் கடந்த நெறி வகுத்த மாபுருஷன்
மனிதநேயத்தின் கீர்த்தனம், வாழ்வை வாழுங்கலையாக்கிட
வரைவிலக்கணம் வகுத்த ஆனந்தப் பாசுரம்






வறுமை, வளமை கடந்து, ஆளும் வர்கத்திற்கு
துதிபாடும் இழி நிலை துறந்த மாமனிதன், பெற்ற கல்வி,
உற்ற செல்வம், இன்புற்ற மனை வாழ்வு-யான் பெற்ற இன்பம்
பெறுக இவ்வையகம் என்றே அருளிய பொதுமறை

முப்பாலையும் தேன் தமிழில் கலந்து-இப்பார்
உய்யப் பாடிய பொய்யா மொழிப் புலவன்-
வள்ளுவப் பெருந்தகை வாழ்வால் சொன்ன விதி
வாழ்ந்தறியும் உண்மையே தெய்வம் என்ற அனுபூதி

வாழும் கலையின் ஆளுமை, இல்லறத்தை
நல்லறமாக்கி-வாசுகியை ஆட்கொண்ட ஆண்மை-
காதலையும் வேதமாக்கிய மேன்மை
பெருமான் வள்ளுவனுக்கே உரித்தான பெருமை

தெய்வம் பலப் பல சொல்லித் தீயை வளர்ப்பவர்
நட்ட கல்லையும் தெய்வம் என்று சொல்வார்
நாலு புஷ்பம் சாத்தி, சுற்றி வந்து தொழுவார்
நாலு வேதம் உண்மை எனப்- போற்றும் மூடர்



மதம் கடந்த மாமனிதனுக்கு நெற்றியில்
நீறு பூசுவார்- சாதியம் கடந்த தெய்வப் புலவனுக்கு
சாதிய விலங்கு பூட்டுவார் வேதிய அசுடர்

ஒருயிரையும் கொல்லாமல், புலால் உண்ணாமல்
வாழ்பவனை உயிர்கள் வணங்கிப் போற்றும்
ஆயிரம் வேள்விகள் புரிதலை விட ஒருயிரைக்
கொன்று உண்ணாததிருத்தல் நன்று என்ற ஞானி

முடி சாாந்த மன்னரெல்லாம் முடிவில்
பிடி சாம்பலாகிட- தமிழ் மறை தந்த தெய்வப் புலவனோ
வாழும் உலகில் இன்றும் ஒளிரும் சூடாமணி
அன்பும், உண்மையும் என்றும் அமைதியின் வழி




தொழும் வேதமெல்லாம் மதத்தொழுநோயாய்
மானுடத்தை வாட்டிட-மதம் கடந்து
பொது மறை, தமிழ் மறை தந்த
பொய்யா மொழிப் புலவன் வாழ்க வாழ்கவே!



தேவர், நாயனார், தெய்ப்புலவர், செந்நாப்போதர்,
பெருநாவலர், பொய்யில்புலவர், பொய்யாமொழிப் புலவர்,
மாதானுபங்கி, முதற்பாவலர் எனப் போற்றிப் புகழ
1330 குறளால் வாழும் வழி சொன்ன பெருமான்

வாழுங்கலையை விருந்தாக்கி-செல்விருந்தோம்பி
வருவிருந்து பார்த்திருக்கும் யாவருக்குமாம் நல்விருந்து
வள்ளுப் பெருந்தகை அருளிய திருக்குறள்
வாழிய வாழியவே

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-10-10-2023*

| | |
|---|---|
| அலர் அறிவுறுத்தல் | : ஊரார் கேலி புரிதல் |
| அவர்வயின் விதும்பல் | : காதலரைக் காணத்துடித்தல் |
| அவா அறுத்தல் | : பேராசை விலக்கல் |
| அழுக்காறாமை | : பொறாமை கொள்ளாமை |
| இகல் | : மாறுபாடு-பகை |
| இடனறிதல் | : ஏற்ற இடம் அறிதல் |
| இடுக்கண் அழியாமை | : துன்பத்திற்குக் கலங்காமை |
| இரவு | : இரத்தலின் தன்மை |
| இரவச்சம் | : இரத்தலுக்கு அஞ்சுதல் |
| இறைமாட்சி | : அரசின் சிறப்பு |
| இன்னா செய்யாமை | : துன்பம் செய்யாமை |
| உறுப்பு நலன் அழிதல் | : அழகு குலைதல் |
| ஒப்புரவறிதல் | : சமுதாய நலம் நாடுதல் |
| ஒற்றாடல் | : ஒற்றர்களின் சிறப்பு |
| கண்ணோட்டம் | : இரக்கம் காட்டும் பண்பு |
| கண் விதுப்பழிதல் | : கண் படுத்தும் பாடு |
| கயமை | : கீழ்மை |
| கள்ளாமை | : திருடாமை |
| குடிமை | : குடிச்சிறப்பு |
| கேள்வி | : கேட்டல் |
| சிற்றினம் சேராமை | : சிறுமையாளருடன் சேராமை |
| சுற்றந் தழால் | : சுற்றத்தாரைச் சேர்த்துக் கொள்ளல் |
| செய்ந்நன்றியறிதல் | : பிறர்செய்த உதவியை மறவாமை |
| தகை அணங்குறுத்தல் | : காதலியை நினைத்து உருகுதல் |
| தனிப்படர் மிகுதி | : தனிமைத் துயரம் |
| தெரிந்து செயல்வகை | : ஆராய்ந்து செய்தல் |
| நடுவு நிலைமை | : பொதுவாக இருத்தல் |
| நல்குரவு | : வறுமை |
| நன்றியில் செல்வம் | : பயனற்ற செல்வம் |
| நாணுத்துறவு (உரைத்தல்) | : நாணத்தை மீறுதலைக் கூறுதல் |
| நிலையாமை | : நிலையில்லாமை |
| நிறை யழிதல் | : மன அடக்கம் குலைதல் |
| நீத்தார் பெருமை | : துறவின் பெருமை |
| நெஞ்சொடு கிளத்தல் | : மனத்தோடு பேசல் |
| நெஞ்சொடு புலத்தல் | : மனத்தோடு ஊடுதல் |
| பசப்புறு பருவரல் | : பசலைத் துயரம் |
| படர் மெலிந்திரங்கல் | : நினைவுத்துயர் |
| படைச் செருக்கு | : படைத்திறம்/படையின் ஆற்றல் |
| பழைமை | : பழம் பெரும் நட்பு |
| பிறனில் விழையாமை | : மற்றவன் மனைவியை விரும்பாமை |
| புணர்ச்சி மகிழ்தல் | : கூடுதலின் இன்பம் |
| புணர்ச்சி விதும்பல் | : கூடுவதற்கான துடிப்பு |
| புலவி | : காதலர் பிணக்கு |
| புலவி நுணுக்கம் | : பிணக்கின் நுணுக்கம் |
| புல்லறிவாண்மை | : சிற்றறிவுடைமை |
| பெண் வழிச் சேறல் | : பெண் பித்தராதல் |
| பேதைமை | : ஒன்றுந் தெரியாமை |
| பொச்சாவாமை | : மறவாமை |
| பொருள் செயல் வகை | : பொருளீட்டல் |
| பொழுது கண்டு இரங்கல் | : மாலை மயக்கம் |
| பொறையுடைமை | : பொறுத்துக் கொள்ளல் |
| மடி இன்மை | : சோம்பலில்லாமை |
| மெய்யுணர்தல் | : உண்மையறிதல் |
| வரைவின் மகளிர் | : விலை மகளிர் |
| வலி அறிதல் | : வலிமையை அறிதல் |
| வழிபாடு | : பின்பற்றுதல் |
| வினை செயல்வகை | : செயல்திறம் |
| வினைத் திட்பம் | : (செய்கையில்) மனஉறுதி |
| வினைத் தூய்மை | : நற்செயல் |
| வெகுளாமை | : சினங் கொள்ளாமை |
| வெஃகாமை | : பிறர் பொருளைக் கவர நினையாமை |